[27th April 1960

போகாமல் இருந்துவிட்டார்கள். இவ்விதம் பரீட்சைக்குப் போகாமல் இருந்த மாணவர்களுக்கு அனுகூலம் செய்கின்ற முறையில், மீண்டும் ஒரு பரீட்சைக்கு வேறு **Examiner**-ஐ நியமித்து நடத்த அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI **M. A. MANICKAVELU** : இவ்விதமான புகார் யார் செய்தார்கள், யார் இவ்விதம் சொன்னது, எங்கே, எப்போது என்கிற விபரம் ஒன்றும் என்னிடம் இப்போது இல்லை.

SRI T. T. DANIEL : May I know the allegations that the students have made in their representations against the appointment of these Examiners ?

MR. SPEAKER : There is no mention in the main question that the students have made allegations.

SRI T. T. DANIEL : Sir, in sub-clause (*a*) of the question mention is made about representations by candidates.

MR. SPEAKER : If the Hon. Minister is prepared to answer, I have no objection.

THE HON. SRI M. A. MANICKAVELU : I am not aware of it.

SRI **A. VEDARATHNAM** : இந்த மாணவர்கள் பரீட்சாதிகாரிகளின் மீது சொன்ன குற்றச்சாட்டுகள் என்ன ? அதைப்பற்றி அரசாங்கம் பரிசீலித்து ஏதாவது முடிவு செய்ததா, அப்படியென்றால், இம்மாதிரிக் குற்றச்சாட்டுகள் சொல்லுவதற்கு என்ன காரணம் என்பதைத் தயவு செய்து தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI **M. A. MANICKAVELU** : இது பற்றிய விவரங்கள் ஒன்றும் இப்போது என்னிடமில்லை.

(The hon. Member Sri K. Vinayakam rose.)

MR. SPEAKER : Is the Assembly going to be made the forum for making allegations against teachers ? Next question.

*Fertilizers*

*728 *Q*.—SRI **A. A. RASHEED**, SRI **M. P. SARATHI**, SRI **V. K. KOTHANDARAMAN** : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) இந்த ராஜ்யத்தில் உரம் எவ்வாறு வினியோகிக்கப்படுகிறது ?

(ஆ) உர வினியோகத்தில் ஈடுபட்டவர்கள் கருப்பு மார்க்கெட்டில் விற்பதாகவும், உரத்தைப் பதுக்கிக்கொண்டு அதற்குப் பதிலாக உப்பை உரமென்று ஏமாற்றி, விற்றதாக அரசாங்கத்திற்குப் புகார் வந்துள்ளதா ?

(இ) அதன் மீது போலீஸார் நடவடிக்கை எடுத்து எத்தனை பேரைக் கைது செய்தனர் ?

(ஈ) இம்மாதிரி மோசடிகள் எந்தெந்த இடங்களில் நடைபெறுவதாகத் தெரியவருகிறது.

THE HON. SRI **M. BHAKTAVATSALAM** : A paper [a] is placed on the table of the House.

---

[a] Printed as Appendix I on page 639-640 infra.

27th April 1960]

SRI A. A. RASHEED: According to the statement placed on the table of the House, one-half of the total quantity of fertilizers is distributed through three private merchants. So, will the Government distribute these fertilizers through the co-operative societies instead of through these three merchants alone ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: That is the decision which has already been taken.

SRI A. GOVINDASAMY: சமுதாய நலத் திட்டத்தின் கீழ் இருக்கின்ற பகுதிகளில் சில கூட்டுறவு சொசைட்டிகளுக்கு மட்டும்தான் இந்த உர வினியோகத்திற்கு அனுமதி அளிக்கப்பட்டிருக்கிறது. அதல்லாமல் கூட்டுறவு ஸ்தாபனங்கள் எங்கெல்லாம் இருக்கின்றனவோ அவைகள் கிராமப் புறங்களில் இருந்தாலும் கூட, அந்த சொசைட்டிகள் எல்லாவற்றிற்கும் இந்த உர வினியோகம் செய்வதற்கு அனுமதி அளிக்க சர்க்கார் முயற்சிக்குமா ?. இதனால் விவசாயிகளுக்கு அதிகமான அளவில் பலன் கிடைக்கும் என்பதை அரசாங்கம் உணருகின்றதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சில கூட்டுறவுச் சங்கங்களுக்குத்தான் உர வினியோகத்திற்கு அனுமதி அளிக்கப் பட்டிருக்கிறது என்று சொல்லுவது சரியல்ல. எல்லாக் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாகத்தான் இதை வினியோகம் செய்யவேண்டும் என்பது அரசாங்கத்தின் நோக்கம். அந்த முறையில்தான் இப்போது எல்லா இடங்களுக்கும் கொடுக்கப்பட்டு வருகிறது. அது மட்டுமல்ல, அக்ரிகல்சரல் பாங்குகள் இருக்கின்ற இடங்களில் அவைகள் மூலமாகவும் இந்த உர வினியோகம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டு இருக்கிறது.

SRI A. A. RASHEED: Since adulteration and blackmarketing are due to short supply of fertilizers, what are the steps the Government have taken to obtain larger quantities of fertilizers on a short-term basis ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I have already explained the position. If we want to get larger quantity of fertilizers on a short-term basis, it has to be done by way of imports from other countries.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : இந்த உர வினியோகம், கடன் வரவு-செலவு செய்கின்ற எல்லா கூட்டுறவு சொசைட்டிகளுக்கும் பரவலாகக் கொடுக்கப்படுமானால் இம்மாதிரியான புகார்கள் எல்லாம் வராமல் இருக்கும் என்பதை அமைச்சர் அவர்கள் அறிவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதுதான் அரசாங்கத்தின் நோக்கம்.

SRI S. M. ANNAMALAI : ஸார், மேஜைமீது வைக்கப்பட்டிருக்கும் அறிக்கையில் அரியலூரில் உப்பை அமோனியம் சல்பேட் என்று விற்றதாகவும், திண்டிவனத்தில் 400 மூட்டையைக் காணவில்லை என்ற புகாரும் சொல்லப்பட்டிருந்தது, அவைகள் ஒன்றும் இதில் காணப்படவில்லையே, அதற்குக் காரணம் என்ன ? இதன் பேரில் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் அவர்கள் கடைசியாகக் குறிப்பிட்டது, விசாரிக்கப்பட்டு அதற்கு தண்டனை கொடுக்கப்பட்டு, சிறை வாசமும் அளிக்கப்பட்டிருக்கிறது.

[27th April 1960

SRI M. WILLIAM: Will the Government be pleased to take steps to distribute fertilizers through panchayats ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The actual distribution will be done by the co-operative societies but the panchayats will be in over-all charge of it.

SRI P. G. MANICKAM : நான்-பிளாக் பிரதேசங்களில் தனிப்பட்ட வியாபாரிகள் மூலம் இந்த வினியோகம் செய்யப்பட்டு வருவதாகத் தெரிகிறது. இந்த மாதிரியான இடங்களில் பெரும்பாலும் கூட்டுறவு சங்கங்களுக்கோ, அல்லது பஞ்சாயத்துக்களுக்கோ, உர வினியோகம் செய்வதற்கு அனுமதி அளிப்பது பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: நான் இதைப் பற்றிப் பல தடவை சொல்லியிருக்கிறேன். நான்-பிளாக் ஏரியாவாக இருந்தாலும், அங்கு இருக்கின்ற கூட்டுறவு சங்கங்கள் மூலமாக உர வினியோகம் செய்யவேண்டும் என்றுதான் அரசாங்கம் தீர்மானித்து இருக்கிறது; தனிப்பட்ட வியாபாரிகளுக்குக் கொடுக்க வேண்டாம் என்று அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. அது இப்போது அமுல் செய்யப்பட்டு வருகிறது.

SRI A. GOVINDASAMY : சமுதாய நலத் திட்டப் பகுதிகளில் இருக்கின்ற எல்லாக் கூட்டுறவு சொசைட்டிகள் மூலமாகவும் இந்த உர வினியோகத்திற்கு அனுமதி கொடுக்கப்பட்டிருப்பதாகவும், சில குறிப்பிட்ட சொசைட்டிகளுக்கு மட்டும்தான் கொடுக்கப்படுகிறது என்று சொல்லுவது சரியல்ல என்றும், அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். என்னுடைய தொகுதியைப் பொறுத்தவரையில், நான்கு சொசைட்டிகளுக்குத்தான் அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்ற சொசைட்டிகளுக்கும் இந்த அனுமதி அளிக்க சர்க்கார் முயற்சிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எத்தனை குறிப்பிட்ட சொசைட்டிகள் என்று சொன்னால், அல்லது இன்னின்ன கூட்டுறவு செசைட்டிகளுக்கு உர வினியோகம் செய்ய அனுமதி கொடுக்க வேண்டும் என்று அரசாங்கத்தினிடம் கேட்டால் அதன் பேரில் தக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

SRI R. SRINIVASA IYER: When the village co-operative societies apply for licence under the Fertilizer Control Order, they are asked to apply through the wholesale stockist who does not give permission because he has got a retail depot. So, will the Government be pleased to relax the rule so that when the village co-operative societies apply for licence to deal with fertilizers in retail, they may be granted licence without the consent of the wholesale stockist ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I do not know whether the consent of the wholesale stockist is insisted upon, and if so, for what purpose. If the hon. Member would put a separate question, I shall look into it and answer it.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், உரத்தில் உப்பைக் கலப்படம் செய்வதின் மூலமாக அதை உபயோகிக்கின்ற விவசாயிகளுக்கு பெரும் பாதகம் செய்வதாக இருக்கிறது. இதனால் விவசாய உற்பத்தியைப் பாதிப்பதோடு அல்லாமல் இதன் காரணமாகப் பல குடும்பங்களையும் பட்டினியில் ஆழ்த்துவதற்கு ஒப்பாகும் என்று கனம் அமைச்சர் அவர்கள் கருதுகிறார்களா ? அப்படியானால் இது போன்ற நடவடிக்கைகளுக்குக் கடுமையான தண்டனை கொடுப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கலப்படம் என்பது இப்போது உரத்தில் மட்டுமல்ல, எல்லாப் பொருள்களிலும் கலப்படம் செய்யப்படுகிறது. அரசியலில் கூட கலப்படம் இருக்கிறது. அதை எல்லாம் தவிர்ப்பதற்கு அரசாங்கம் அவ்வப்போது சட்டப்படி நடவடிக்கை எடுத்து வருகிறது. தண்டனை கொடுக்கின்ற விஷயம் கோர்ட்டாரைப் பொறுத்தது